*Nam nāṭu*

*Malar 3, ital 245*

*March 29, 1956*

Record no. 1131

REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 53850

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: பங்குனி 16உ வியாழன் (29—3—56) ★ ★ வெளியூர்: பங்குனி 17உ வெள்ளி (30—3—56) [இதழ் 245

## 'காஷ்மீர் இளவரசி'யை கவிழ்க்க இலஞ்சம் தரப்பட்டது?

லண்டன், மார்ச் 28—

கடந்த ஆண்டு எப்ரலில், 'காஷ்மீர் இளவரசி' என்ற இந்திய விமானத்தில் வெடிகுண்டு வைத்து அதை நாசப்படுத்தினதற்காக ஒரு தேசிய சீன நாசவேலைக்காரனுக்கு அமெரிக்க சர்க்கார் மறைமுகமாக 40,000 பவுன்கள் இலஞ்சம் கொடுத்தது என்று, தான் நம்புவதாக பிரிட்டிஷ் மக்கள் சபையில் தொழிற் கட்சி உறுப்பினர் ஒருவர் கூறியிருக்கிறார்.

(4-ம் பக்கம் பார்க்க)

# தமிழர்களுக்கு இழைத்த அநீதி தகுதி வாய்ந்தவர்கள் தந்தத் தீர்ப்பாம்!

## இந்திய ஐக்கியத்தை அடிப்படையாகக்கொண்டு தமிழர்கள் நலம் கெடுக்கப்பட்டதாம்!

## நில நூல்படி மட்டுமல்லாது பொருளாதார நியாயப்படியும் தென்னகம் ஒரே பகுதிதானும்!

## எதிர்ப்பை ஒடுக்குவாராம்-அடக்கி ஒழிப்பாராம்!

### இந்திய ஐக்கியத்தைக் காக்கக் கங்கணம் கட்டிவிட்டாராம் நிதி மந்திரி

"மாகாணப் புனரமைப்பு முடிவுகள், இந்தியாவின் ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்டு, நாட்டின் தகுதி வாய்ந்தத் தலைவர்களால் உருவாக்கப்பட்டுள்ளன. நாட்டின் இந்த அடிப்படை ஒற்றுமை பிரச்சினையில் விட்டுக் கொடுத்தல் என்பதற்கு இடமே கிடையாது. எந்தப் பரிகாரத்திற்கும், இதைக் கருத்துள் கொள்ளவேண்டும்."

"மேலும் பிணக்கை நீடித்துக்கொண்டுபோவது அறிவுடைமையாகாது சமாதானத்தையும், அமைதியையும் மீண்டும் நிலைநாட்ட வேண்டும்; இல்லையானல் அதனல் நாட்டுக்குத் தீமை ஏற்படும்."

இக்கருத்தை, நிதி அமைச்சர், மாகாணப் புனரமைப்பு மசோதாவை சட்டசபையின் ஆய்வுக்கு கொணர்ந்து பேசியபொழுது அறிவித்தார்

அவர் மேலும் பேசும்பொழுது குறிப்பிட்டிருப்பதாவது:—

"ராஜ்ய சட்டசபைகள், பத்திரிகைகள், பொது மேடைகள் மூலமாக வெளியானக் கருத்துக்களை விரிவாக ஆராய்ந்து, இந்திய அரசாங்கம், இம்மசோதாவில் உள்ள அம்சங்களை உருவாக்கி இருக்கிறது.

"தம் கருத்தை வெளியிடுவதில் இம்மாகாணத்திலுள்ளவர்கள் அமைதியாகவே நடந்துகொண்டு இருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்

"கருத்துவேற்றுமை எதுவாக இருந்தபோதிலும், அநீதி இழைக்கப்பட்டுள்ளது என்பதில் ஏற்படக்கூடிய வேதனை எத்தகையதாக இருந்தபோதிலும், ஜனநாயக முறைப்படியும், சட்ட சம்மதமான வழிப்படியும் தான் அவைகளை மாற்றி அமைக்க மக்கள் முயற்சிக்க வேண்டும். இதை நினைவிலிருத்தப்பட்டாலன்றி, முன்னேற்றமும், செம்மையும் மக்களுக்கு ஏற்படமுடியாது.

"இந்த ராஜ்யத்தைப் பொறுத்தவரையில், இப்பொழுதோ அல்லது எதிர்காலத்திலோ, எந்த ஒரு பகுதி மக்களுடைய பலாத்காரச் செயலையும், இந்த அரசாங்கம் சகித்துக் கொள்ளாது என்பதை ஐயத்திற்கிடமின்றி உணர்ந்துகொள்ள வேண்டும்.

"காங்கிரசின் உள்ளக்கிடக்கையைப் பொறுத்தவரையில், ஒரு ஐக்கிய உருப்பாக—ஒன்றாக இணைக்கப்பட்ட ஒரு நாடாக இருந்து வரவேண்டும் என்பதாகும். இந்தப் பிரச்சினையில் விட்டுக்கொடுத்தல் என்பது எவரிடத்திலும் கிடையாது.

"இந்த ஐக்கிய உறுப்பிலிருந்து ஒரு சிறு அங்கத்தையும் சிதைக்க ஒப்புக்கொள்ள முடியாது; எந்த ஒரு அங்கமும் தனித்து இயங்க முடியாது.

"இந்திய ஐக்கியத்தை சிதறடிக்கக்கூடிய எந்தப் பரிகாரமும், சிரான பரிகாரமாகாது. இந்தியாவின் ஐக்கியம் எவ்வகையிலும் காப்பாற்றப்பட்டே ஆகவேண்டும்."

"காங்கிரஸ் தலைவர்கள் ஒரு தவறைச் செய்து வருவார்களானல், அவர்கள் அதை ஒப்பி, திருத்திக் கொள்வார்கள். பிணியை அவர்கள் சரியாகவே கண்டறிகிருர்கள்.

"மசோதா குறித்துப் போதிய கருத்துச் செலுத்தப்பட்டது. 'அவசர முடிவு' எதுவும் எடுக்கப்படவில்லை.

'பல்வேறு கருத்துக்களையும் ஆராய்ந்தறிந்தே இறுதியான முடிவு எடுக்கப்பட்டுள்ளது

"இம்முடிவைக் காட்டிலும் வேறு சிறந்த முடிவுகள் இருக்கக்கூடும்.

"பொருளாதார வளர்ச்சியிலிருந்து மக்களின் கருத்து வேறு பக்கம் திருப்பப்பட்டு இருக்கிறது அதன் விளைவாக, பொருளாதார முன்னேற்றத்தைவிட மாகாணப் புனரமைப்பு முக்கியமானது என்ற நம்பிக்கையை மக்கள் கொண்டுள்ளனர்.

"தேசியப் பிரச்சினைகளை நிர்வகிப்பதில், நாட்டை நிர்வகிக்கும் பொறுப்பில் இருந்தவரும் இன்றையத் தலைமை, மிகவும் தகுதி வாய்ந்ததாக இருக்கிறது என்பது என் கருத்தாகும்.

"வருங்காலத்தில் பெருந்தலைவர்கள் வரக்கூடும்.

"மக்களின் வறுமையைப்போக்குவது முக்கியமானதாகும். மாகாணப் புனரமைப்புக்கு மிகையான முக்கியத்துவம் அளிக்கக்கூடாது. எப்படி இருந்தாலும், அது, நல்லதும் திறமையானதுமான நிர்வாகத்திற்காகச் செய்யப்படுவதேயாகும்.

மைசூர், ஆந்திரம், கேரளம், சென்னை ஆகிய நான்கு பகுதிகளையும் ஒரு மண்டலமாகக் குறிக்கப்பட்டு, அதற்கென அறிவுரைக் கூறும் மண்டலக் குழு அமைக்கும்—மசோதாவில் கூறப்பட்டுள்ள ஏற்பாடு பற்றி நிதி அமைச்சர் கூறியிருப்பதாவது:—

"இவை ஒவ்வொன்றும் தனித்தியங்கும் முழுச் சுதந்திர ராஜ்யங்களாக, இவைகளை எண்ணக்கூடாது. இப்பகுதி முழுதும் ஒன்றேயாகும். நில நூல் படி மட்டுமே இது ஒன்றாக இருக்கவில்லை; பொருளாதார நோக்கிலிருந்தும் இது ஒன்றேயாகும். ஏனெனில், அவைகளின் பொருளாதார நலம் ஒன்றைப் போலவே ஒத்து இருப்பதாகும். எனவே, ஏதோ ஒரு வகையான கூட்டுறவு இப்பகுதியில் உள்ள ராஜ்யங்களிடை இருப்பது நலமாகும்."

## கம். கட்சி சொத்துக்கள் கைப்பற்றப்பட்டன

நியூயார்க், மார்ச். 28—

பழைய வரி நிலுவையைச் செலுத்தவில்லை என்று காரணம் காட்டி, பல்வேறு நகரங்களிலுள்ள கம்யூனிஸ்டுக் கட்சி கட்டிடங்களையும், அவற்றிலிருந்த சொத்துக்களையும் அமெரிக்க அதிகாரிகள் கைப்பற்றியுள்ளனராம்

'டெய்லி ஒர்க்கர்' என்ற கம்யூனிஸ்டுக் கட்சி இதழின் அச்சக இயந்திரங்களையும், சொத்துக்களையும்கூட 'ஜப்தி' செய்ய அதிகாரிகள் நடவடிக்கை எடுத்தார்களாம்.

## காந்தி நிகேதனத்தில் விபசாரம்

### சித்திரவதை செய்து கொலையாம்!

சென்னை, மார்ச். 27—

கல்லுப்பட்டி காந்தி நிகேதன் ஆசிரமத்தில் செல்வராஜ் என்பவர் தோல் பதனிடும் சாலையில் போதகராக இருந்ததாகவும், சுப்பிரமணியம் என்பவர் அங்கு பயிற்சி பெற்று வந்ததாகவும், சுப்பிரமணியத்தை தம் மனைவியுடன் கள்ளத்தனமான உறவு கொண்டிருந்தவரென்று தவறாக நினைத்து, அவர்மீது 'சல்பியூரிக்' திராவகத்தை ஊற்றி அவரை செல்வராஜ் சாகடித்ததாகவும் சொல்லப்படுகிறது.

இச்சம்பவம் 1955 ஜனவரித் திங்கள் 6-ம் தேதி கல்லுப்பட்டி காந்தி நிகேதன் ஆசிரமத்தில் நிகழ்ந்ததெனத் தெரிகிறது.

மதுரை 'செஷன்ஸ்' நீதிபதி செல்வராஜுக்கு 10 வருட கடுங்காவல் தண்டனை விதித்தார்.

செல்வராஜ் சென்னை உயர் நீதிமன்றத்திற்கு 'கிரிமினல் அப்பீல்' தாக்கல் செய்ததின்மீது, நீதிபதி என். சோமசுந்தரம் அவர்கள், செல்வராஜை காயமேற்படுத்திய குற்றவாளி எனக் கருதி தண்டனையை 5 வருடங்களாகக் குறைத்து தீர்ப்பு வழங்கியுள்ளார்.

## மாநிலப் புனரமைப்பு மசோதா: 80 திருத்தங்கள் சமர்ப்பணம்

### 'தமிழகம்' அல்லது 'தமிழ் நாடு' என்று பெயர் மாற்றுக'

### 'தகராறுகளைத் தீர்க்க பாரபட்சமற்ற எல்லைக்குழு நியமிக்கவும்'

சென்னை சட்டசபையில் எதிர்க்கட்சி உறுப்பினர்களின் திருத்தப் பிரரேபணைகள்

சென்னை, மார்ச் 28—

இப்போது நடைபெற்று வருகிற சென்னை சட்டசபைக் கூட்டத்தில், மாநிலத் திருத்த அமைப்பு மசோதா மீது 80 திருத்தப் பிரரேபணைகளைக் கொண்டு வருவது என்று எதிர்க் கட்சி உறுப்பினர்கள் முடிவு செய்து, நோட்டீசும் விடுத்திருக்கின்றனர்.

'சென்னை இராஜ்யம்' என்றிருக்கும் பெயரை மாற்றி, 'தமிழ் நாடு' என்று பெயரிட வேண்டும் என்று தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன் தலைவர் ஏ. இரத்தினம் திருத்தப் பிரரேபணை ஒன்று கொடுத்துள்ளார் என்றும், அதே திருத்தத்தை தோழர் விநாயகமும் பிரரேபிக்க இருக்கிறார் என்றும் தெரியவருகிறது.

தோழர் ஏ. வேலு எம்.எல்.ஏ. அவர்கள் 'சென்னை இராஜ்யம்' என்ற பெயருக்குப் பதிலாக, 'தமிழகம்' என்று மாற்ற வேண்டுமென்று பிரரேபணை கொண்டுவர இருப்பதாக அறிவித்திருக்கிறார். இதே திருத்தத்தை தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. அவர்களும் கொண்டுவர இருக்கிறார்.

திருவனந்தபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த அகத்தீசுவரம், தோவாளை, கல்குளம், வளவன்கோடு, நெய்யாற்றங்கரை தாலுகாக்களையும், கொல்லம் மாவட்டத்தைச் சேர்ந்த செங்கோட்டைத் தாலுகாவையும், கோட்டயம் மாவட்டத்தைச் சேர்ந்த தேவிகுளம், பீர்மேடு ஆகிய தாலுகாக்களையும், கொச்சின்—சித்தூர் பகுதி நீங்கலாக உள்ள கொச்சின்-சித்தூர் தாலுகாவையும் சென்னை மாநிலத்துடன் சேர்க்க வேண்டுமென்றும், சென்னை—ஆந்திர மாநிலங்களுக்கிடையே உள்ள எல்லைத் தகராறுகளைத் தீர்த்து வைக்க உடனடியாக ஒரு பாரபட்சமற்ற எல்லைக் குழு நியமிக்க வேண்டும் என்றும் வருகிற அக்டோர் திங்கள் 1-ம் தேதிக்கு முன்னர்—அதாவது மாநிலங்கள் திருத்தி அமைக்கப்படுவதற்கு முன்னர் தங்களுடைய சிபாரிசுகளைச் சமர்ப்பித்துவிட வேண்டும் என்றும், தோழர் கே. விநாயகம் அவர்கள் திருத்தப் பிரரேபணைகள் கொண்டுவர இருக்கிறார்.

புதுவை, காரைக்கால் பகுதிகளை சென்னை மாநிலத்துடன் இணைக்கவேண்டும் என்று தோழர் என். கே. பழனிச்சாமி திருத்தம் கொண்டு வருகிறார்.

சென்னை மாநிலத்திற்கும், அதை அடுத்துள்ள மாநிலங்களுக்கும், ஆந்திர—கேரள—மாநிலத்திற்கும், கேரள—மைசூர் மாநிலத்திற்கும்

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 29—3—'56 வியாழன்

# மாராட்டியர் வழிகாட்டுகின்றனர்!

இராஷ்டிரபதி சிவாஜியின் வழிவந்த மாராட்டிய வீர மக்களின் உள்ளங்களில், மொகலாய சாம்ராஜ்யத்தைப் புறமுதுகுக் கண்ட அம்மாவீரன் ஏற்றிவைத்த வீரத் திருவிளக்கு இன்றும் அணைந்துபோகவில்லை. அவ்விளக்கு முன்னிலும் பிரகாசமாக சுடர்விட்டு எரிந்துகொண்டு இருக்கிறது என்பதை, மாராட்டியத் தலைவர்களின் உரிமை காக்கும் அருஞ் செயல் மெய்ப்பித்துக் காட்டுகிறது.

பம்பாயைத் தலைநகராகக் கொண்டு மாராட்டிய மாகாணத்தை உருவாக்க வேண்டுமென்பது மாராட்டிய பெருங்குடி மக்களின் நியாயமான கோரிக்கையாகும். அக்கோரிக்கையில் எவராலும் மறுக்க முடியாதத் தன்மையில் மண்டிக் கிடக்கும் நியாய பலத்தை ஒப்பாமல் ஒப்பிக்கொண்டு, பணபலம் படைத்த குஜராத்தியர்களின் கொடுஞ் சீற்றத்திற்கு அஞ்சி, பம்பாய் நகரை மாராட்டிய மண்டலத்துடன் சேர்க்க காங்கிரஸ் மேலிடம் மறுத்துவிட்டது. அம்மறுப்பை அடிப்படையாகக் கொண்டு, பம்பாய் நகரை மத்திய ஆட்சிக்குட்படுத்தும் ஒருஏற்பாட்டை, மாகாணப் புனரமைப்பு மசோதாவில் நுழைத்து விட்டது இந்திய அரசாங்கம்.

தங்களிடத்தில் நம்பிக்கை வைத்து மாராட்டிய மக்கள் நடந்துகொள்ள உடன்படாதது ஒரு பெரிய தேசத்துரோகம் என்று குஜராத்தியத் தலைவர்கள் வீரதீரமாக தேசீயம் பேசுகிறார்கள். மாராட்டிய மக்கள்மீது தங்களுக்குள்ள பகைமூளைப்பின் காரணமாகத்தான் மாராட்டிய மண்டலத்தில் நியாயமாக பம்பாய் நகர் சேருவதை, முழு மூச்சுடன் எதிர்க்கிறார்கள் என்ற உண்மை, தங்கள் எதிர்ப்பின் மூலம் வெளிப்படையாகத் தெரிவதை, மேற்குறிப்பிட்டவாறு பத்தரைமாத்து தேசீயம் பேசுகின்ற குஜராத்தியர்கள் ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். நிற்க,

நடு நின்று நேர்மையான நீதி வழங்க வேண்டிய கட்டாயப் பொறுப்பில் இருக்கிற இந்திய அரசாங்கமோ, மாராட்டியரின் நியாயமான விருப்பத்திற்கு மாருக, குஜராத்தியர் பக்கத்தில் சார்ந்துவிட்டது. உழவர் பெருமக்களுக்குரிய உரிமை ஒழிக்கப்பட்டு, தொழிலதிபர்களுக்குக் கோர உரிமையற்ற புது ஆக்கம் தேடித் தருவதில், இந்திய அரசாங்கம் முனைந்துவிட்டது.

உலகப் புகழ், துணைக்கண்டத்து நலம், என்றெல்லாம், பிரஸ்தாப விவகாரத்திற்குத் துளியும் பொருத்தமற்ற விஷயங்களைக் கிளப்பி, பம்பாய் நகர் மாராட்டியர்களுக்குக் கிடையாது எனக் கூறிவிட்டது, இந்திய அரசாங்கம்.

அதுகண்ட மாராட்டிய மண்டலக் காங்கிரஸ் குழு, சென்னையில் 'பச்சைத் தமிழர்' ஏவல் வழி கட்டுண்டு கிடக்கும் காங்கிரஸ்போல் மானமிழந்துவிடாமல், பம்பாய் சட்டசபை இரண்டிலும் உறுப்பினர்களாக உள்ள வீர மாராட்டிய மரபைச் சேர்ந்த அனைவரையும், பதவியைவிட்டு வெளியேறும்படி கட்டளை பிறப்பித்தது. மக்கள் சபை உறுப்பினர்களுக்கும் அதே கட்டளையைப் பிறப்பித்தது. அமைச்சர்களாக உள்ளவர்களுக்கும், அக்கட்டளையில் விலக்களிக்கப்படவில்லை.

அக்கட்டளையின் விளைவாக, உருவான அரசியல் நெருக்கடி மிக மிக பயங்கரமானதாக இருந்தது. அதைப் பார்க்க இந்தியப் பிரதமர் உள்ளிட்ட காங்கிரஸ் மேலிடமோ குலைநடுக்கம் கண்டுவிட்டது.

மாராட்டிய மண்டல காங்கிரஸ் குழு போக்கு அகில இந்திய காங்கிரஸ் மூல சட்டதிட்டத்திற்கு முரண்பாடானது எனப் பசப்பி, மாராட்டிய சட்டசபை உறுப்பினர்களுக்குப் பிறப்பித்தத் தாக்கீதை, மாராட்டிய மண்டல காங்கிரஸ் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டிக்கொண்டது காங்கிரஸ் மேலிடம். வேண்டுகோளைக் கண்டதும், இட்ட கட்டளையைத் திரும்பப் பெற உடன்பட்டு விடவில்லை மாராட்டிய காங்கிரஸ். தனது முடிவை மீண்டும் ஒருமுறை ஆராய்ந்து பார்க்கவேண்டுமென, காங்கிரஸ் மேலிடத்தைக் கேட்டுக்கொண்டது மாராட்டிய காங்கிரஸ்.

இவ்வளவு உள்ளடிப் போராட்டத்திற்குப் பிறகு, அச்சுறுத்தியோ ஆசைமூட்டியோ, எப்படியோ ஒருவகையில் தங்கள் முடிவுக்கு மாராட்டிய காங்கிரசை இணங்கச் செய்துவிட்டது, காங்கிரஸ் மேலிடம். இருந்தாலும், மாராட்டிய காங்கிரஸ் தலைமை பீடமும் அதை நத்திக் கிடக்கும் சிலரும்தான் காங்கிரஸ் மேலிடத்தின் அக்கிரமத்திற்கு அடிபணிய முனைந்தனரே அல்லாது, தொன்மை வீரம் பட்டுப் போகாத பல சட்டசபை உறுப்பினர்கள் அரிய வாய்ப்பை நோக்கிய நிலையில், அத்தருணம் அடங்கிவிட்டனர்.

சத்திரபதி சிவாஜியின் ஒத்த உள்ளங்கொண்ட உறுப்பினர்கள் எதிர்பார்த்திருந்த வாய்ப்பு இப்பொழுது கிடைத்திருக்கிறது. அதாவது, மாராட்டிய மக்களின் நியாயமான நீண்ட கால கோரிக்கைக்கு உயிரூட்ட வேண்டிய அரிய வாய்ப்பாக, பம்பாயில் நடைபெறும் மாகாணப் புனரமைப்பு மசோதா விவாதம் அமைந்திருக்கிறது. அவ்வாய்ப்பைத் தவறவிடாமல் பயன்படுத்திக் கொள்ளுவது என அவர்கள் சூளுரைத்துக் கொண்டுவிட்டார்கள்.

புதிய மசோதாவை ஒரே மனதுடன் நிறைவேற்றுவதில் ஆராய்ந்து முடிவு எடுப்பதற்காகக் கூட்டப்பட்ட மாராட்டிய மண்டல சட்டசபை காங்கிரஸ் கட்சிக் கூட்டம், உடன்பாடு காண முடியாது கலைந்துவிட்டது. அக்கூட்டத்திலேயே பலர், 'மசோதாவை எதிர்த்துப் பேசலாம்; ஆனால் எதிராக வாக்களிக்கக் கூடாது' என்ற காங்கிரஸ் கட்டளையைக் கனல் கக்கத் தாக்கி இருக்கிறார்கள். பம்பாய் நகரை மாராட்டிய மண்டலத்துடன் இணைக்க வேண்டும் என்ற ஒரு திருத்தத்தைக் கொண்டுவருவதென்றும் பல உறுப்பினர்கள் அறிவித்துவிட்டார்கள். மசோதாவிற்கு எதிராக வாக்களிப்பது எனவும் பலர் ஒளிவு மறைவு இன்றி தெரிவித்துவிட்டார்கள்.

மாராட்டிய மண்டலத்துடன் பம்பாய் நகரை இணைக்க வேண்டும் என்ற திருத்தமும் சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவருக்கு அனுப்பப்பட்டுவிட்டது. காங்கிரஸ் மேலிடத்தின் எதேச்சாதிகாரம் பொடிப் பொடியாகச் சிதறுகிறது!

மசோதாவை எதிர்த்து நேற்று பேசிய இரு காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள், மசோதாவிற்கு எதிராக தாங்கள் வாக்களிக்கப் போவதாக உறுதியுடன் அறிவித்து விட்டார்கள்.

'மசோதாமீது எடுக்கப்படும் முடிவு வெறும் சிபாரிசே ஒழிய, இந்திய அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தக் கூடியதல்ல. உண்மை இவ்வாறு இருக்கும் பொழுது, தங்கள் விருப்பம் போல் வாக்களிக்கும் காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு உரிமை வழங்காதது ஆச்சரியத்துக்கு உரியதாகும்' என்று, மசோதாவிற்கு எதிராக வாக்களிக்கப் போவதாக அறிவித்த நாவல் ஆநந்த படீல் என்ற காங்கிரஸ் உறுப்பினர் தமது பேச்சில் குறிப்பிட்டு இருக்கிறார்.

சட்டசபையின் முடிவு எதுவானாலும் அது இந்திய அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தாது என்பதற்காக, மாராட்டிய மக்களின் நியாயமான விருப்பத்தை எடுத்துக் கூருது விட்டு விடவில்லை அந்தக் காங்கிரஸ் உறுப்பினர். தமக்கு சட்டசபையுள் நுழையும் வாய்ப்பளித்த மாராட்டிய மக்களுக்குத் தாம் சட்டசபை உறுப்பினராக இருந்து ஆற்ற வேண்டிய பொறுப்பான கடமையைச் செவ்வனே செய்து புகழ் நாட்டி இருக்கிறார்—மாராட்டிய இனத்தின் மங்காப் புகழை நிலைநாட்டி இருக்கிறார், அந்த உறுப்பினர்.

மாராட்டிய காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களின் கடமை உணர்வு, தமிழ் சட்டசபை உறுப்பினர்களுக்கு ஏற்பட வேண்டும். அவர்களைப் பின்பற்றி நமது தமிழ் உறுப்பினர்களும், தங்களுக்கு இப்பதவியை அளித்தத் தமிழ்ப் பெருங்குடி மக்களுக்கு ஆற்ற வேண்டிய தங்கள் பெருங் கடமையை ஆற்ற வேண்டுகிறோம்.

காங்கிரஸ் கட்டுப்பாட்டை மீறினால், முதலமைச்சர் காமராசரின் பகைதான் சட்டசபை உறுப்பினர்களுக்குக் கிடைக்கக்கூடும். ஆனால் தமிழ் மக்களின் நியாயமான கோரிக்கையை எடுத்துக்காட்டி ஆதரவுதர உறுப்பினர்கள் மறந்துவிட்டால், தமிழர்களின் தணிக்க முடியாத பெருங் கோபத்திற்கு ஆளாக வேண்டி வரும்.

இந்த இரண்டில் எது தாங்கிக்கொள்ளக் கூடியது என்பதை ஆராய்ந்தறிந்து மனச்சாட்சிப்படி நடந்துகொள்ளும்படி, காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறோம்.



# தேர்தலில் வெற்றி பெற்ற பின் கட்சி மாறும் போக்கு

## 'வாக்காளர் பெருமக்களுக்குச் செய்யும் மாபெரும் துரோகமாகும்'

'ஜனநாயகம் தழைக்க முடியும் என்ற நம்பிக்கையைத் தோல்வியுறச் செய்யும்'

"ஒரு கட்சியின் பேரால் வாக்காளர்களிடம் வாக்குகள் பெற்று சட்டசபைக்கு வந்தபின், கட்சி மாறுவது ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு விரோதமாகும். அப்படி கட்சி மாறுவதற்கு முன் தன் தொகுதி பிரதிநிதித்துவப் பதவியை இராஜினமாச் செய்யவேண்டுவது தார்மீகமான கடமையாகும். சட்டசபை அங்கத்தினர்களின் பொறுப்பு உணர்ச்சிகளில் அதுவும் ஒன்றாகும்.

"வாக்காளர்களுக்கு தங்கள் அங்கத்தினர்களைத்தான் தேர்ந்தெடுக்கும் உரிமை இருக்கிறதே யொழிய, தேர்ந்தெடுத்து அனுப்பிய பிரதிநிதிகளை 'வாபஸ்' பெறும் உரிமை இல்லை. இந்தப் பலவீனமான பாகத்தால் ஏற்படும் முட்டுக்கட்டையை சமாளிக்கவேண்டுவது சட்டசபை அங்கத்தினர்கள் கையில் இருக்கிறது.

"காங்கிரஸ் கட்சியின் பேராலோ, அல்லது பி. சோ. கட்சியின் பேராலோ தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்றவர்கள் பின்பு பி. சோ.-விலிருந்து காங்கிரசிற்கு மாறுவதும், காங்கிரசிலிருந்து பி.சோ.-வுக்கு மாறுவதும் தங்கள் தொகுதி வாக்காளர்களுக்குத் துரோகம் செய்வதற்கு ஒப்பாகும்.

"இன்றைய நெருக்கடி சமயத்தில் கட்சிவிட்டு கட்சி மாறுவது ஒரு தொத்து நோய் போல் வியாபித்துவிட்டது. காலையில் மாறுவதும் மாலையில் மீண்டும் சொந்த கட்சிக்குத் திரும்புவதும் சாதாரணமாகிவிட்டதே என்பதற்காக அரசியலில் கொஞ்சமாவது மதிப்புள்ளவர்கள் வருத்தப்படாமலிருக்கமாட்டார்கள்.

"சுயேச்சையாளர்களை அனுப்புவதைவிட, கட்சியாளர்களை அனுப்புவதுதான் உத்தரவாதம் கொண்டதாகும் என்று நம்பித்தான் வாக்காளர்கள், கட்சிகளுக்கு வோட்டளிக்கின்றனர். இப்படிச் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தாற்போல் பிரதிநிதிகள் கட்சி மாறுவார்கள் என்றால், வாக்காளர்கள், சுயேச்சையாளர்களை ஆதரித்திருக்கலாமல்லவா? கட்சி அரசியல் மூலமே ஜனநாயகம் தழைக்க முடியும் என்ற நம்பிக்கையைத் தோல்வியுறச் செய்யும் நிகழ்ச்சிகள் நிரம்ப நடந்துவிட்டன.

"அங்கத்தினர்கள் வாக்காளர்களை இப்படி சந்தர்ப்பங்களில் கை விடுவதால்தான் அவர்களுக்கு அரசியலில் நிராசை ஏற்பட ஏதுவாகிறது.

"திரு-கொச்சி மக்களில் பெரும் பகுதியினரும் 'இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன?' என்ற சோர்வு மனப்பான்மை கொள்ள ஆரம்பித்துவிட்டனர். இந்த சோர்வு நிலை அகற்றப்படுவதற்கான ஒரு அரசியல் அபிவிருத்தி இங்கு ஏற்பட்டாக வேண்டும்.

"இந்தியாவிலுள்ள அதிகம் படித்தவர்கள் வாழும் ஒரு பிரதேசத்தில், அரசியல், தாமரை இலை தண்ணீர்போன்று நிலையற்று சலனமாடி வருவதால் யாரும் கௌரவப்பட முடியாது."

—என்று, 24—3—56 'தினமலர்' இதழ், தனது தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளது.

### சணலால் புதுவித கம்பளி ஆடை

ரூ. 1·27 இலட்சம் சர்க்கார் ஒதுக்கியுள்ளதாம்

புதுடில்லி, மார்ச், 26—

சணலால் புதுவித கம்பளி ஆடை தயாரிக்கும் திட்டம் குடியமைப்பு இலாகாவின் ஆதரவுடன் அமுல் நடத்தப்பட்டு வருகிறதாம். உலகத்திலேயே இங்குதான் முதன் முதலாக இந்தச் சோதனை நடத்தப்படுகிறது எனத் தெரியவருகிறது.

இந்தப் புது ரகத் துணிக்கு சாயம் பூசுவதும், வெளுப்பதும் சுலபமாம்; மற்ற நூல்களுடன் இதைச் சுலபமாக கலந்து உபயோகிக்கவும் இது பயன்படுமாம். இது கண்ணைப் பறிக்கும் கவர்ச்சிகரமான ஒளிவீசும் நிறமுடனும், மிருதுவாகவும், உறுதியாகவும், மலிவாகவும் விளங்குகிறதாம்; கம்பளங்கள் தயாரிப்பதற்கு இது பெரிதும் பயன்படுகின்றதாம்.

கிழக்கு வங்கத்திலிருந்து வெளியேறிவந்த 100 அகதிகளுக்கு சணல் கம்பளி ஆடை தயாரிப்பதில் பயிற்சி அளிக்க, ரூ. 1·27 இலட்சம் குடியமைப்பு இலாகா ஒதுக்கியுள்ளதாம். இந்த 100 அகதிகளுக்கும் பயிற்சி முடிந்த பின்னர், கிழக்குப் பகுதியில் உள்ள மற்றைய அகதி 'காலனி'களுக்கும், குடிசைத் தொழில் அடிப்படையில இத்தொழில் விரிவாக்கப்படுமாம்.

### மக்கள் முன்வந்தால் ஆதரவளிப்பார்களாம்!

சென்னை, மார்ச் 27—

கூட்டுறவு அடிப்படையில் சர்க்கரை ஆலைகள் ஏற்படுத்துவதற்கு மக்கள் அக்கரை எடுத்துக்கொண்டு அதற்குத் தேவையான மூலதனம் திரட்டினால் அரசாங்கம் உதவி செய்யுமாம்!

சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில், விவசாய அமைச்சர் பக்தவத்சலம் இதுபற்றி சொன்னதாவது:—

'ஒரு சர்க்கரை ஆலை துவக்குவதற்கு 80 அல்லது 90 இலட்சம் ரூபாய் மூலதனம் தேவையாக இருக்கும். ஆனால், கூட்டுறவு முறையில் ஆலை ஏற்படுத்துவதென்றால், பொதுமக்கள் ரூ 10 இலட்சம் மூலதனம் திரட்டினால் போதும்; சர்க்கார் அந்த ஆலையில் பங்குகள் எடுத்துக்கொள்ளும்."

### புற்றுநோயைக் கண்டுபிடிக்க புதிய கருவி

மனிதர்களின் உடலில் புற்றுநோய் எங்கு ஏற்பட்டிருந்தாலும் அதைக் கண்டு பிடிக்கக்கூடிய கருவியொன்று தயாரிக்கப்பட்டிருக்கிறதாம். 'சாங்விஞேமீடர்' என்ற பெயருள்ள இக்கருவி ஜெக்கோஸ்லோவேகியா உற்பத்திச் சாலையொன்றில் தயாரிக்கப்படுகிறதாம்.

இந்தியாவுக்கு ஆண்டுதோறும் 1,00,000 டன் முதல் 1,50,000 டன் வரை கச்சா எலும்பு தேவைப்படுகிறது.



# தடை உத்தரவை மீறிய தொண்டர்களுக்குச் சிறைவாசம்

## ஏழு மகளிருக்கு மூன்று வாரத் தண்டனை

பம்பாய், மார்ச் 28—

மாநிலச் சீரமைப்பு மசோதாவை பம்பாய் சட்டசபை விவாதித்துக் கொண்டிருக்கையில், தடை உத்தரவை மீறி அங்குச் செல்ல முயன்ற 48 சம்யுக்த மகாராட்டிரப் போராட்டத் தொண்டர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

கைது செய்யப்பட்ட 48 தொண்டர்களில், 30 பேருக்கு பிரதம மாகாண நீதிபதி தலா ரூ. 25 வீதம் அபராதமும், தவறினால் ஒரு வாரச் சிறைத் தண்டனையும் விதித்துத் தீர்ப்பளித்தார்; மற்றவர்கள் மீது விசாரணை ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

தண்டனை விதிக்கப்பட்ட 30 பேரும் அபராதம் கட்ட மறுத்து சிறை புகுந்தனர்.

இதைத் தவிர, முன்னேற்பாடாக பல்வேறிடங்களிலும் 136 தொண்டர்களைப் போலீசார் கைது செய்திருக்கின்றனர். அறப்போர்க் குழுவினர் வந்தபோது முழக்கம் எழுப்பியதற்காக மேலும் இருவர் கைதாகியுள்ளனர்.

காலையில், போராட்டத் தொண்டர்கள் மகாராட்டிர அமைச்சர்களின் இல்லங்களுக்குச் சென்று, அவர்கள் இராஜினமாச் செய்ய வேண்டுமெனக் கோரினார்களாம்.

அமைச்சர்கள் இராஜினமாச் செய்யாவிடில், அவர்கள் இல்லங்களுக்கு முன்பும் போராட்டம் நடக்குமென எச்சரிக்கை செய்யப்பட்டதாம்!

பூனாவிலும் ஏழு மகளிர் உட்பட 20 பேர் போராட்டத்தில் ஈடுபட்டு கைதாகியுள்ளனர். நீதிபதி அவர்களுக்குத் தலா மூன்று வாரச் சிறைத் தண்டனை விதித்துத் தீர்ப்பளித்துள்ளார்.

### சென்னைத் தமிழாசிரியர் கழக மாநாடு

ஒரு வேண்டுகோள்

8—4—56-ல், தஞ்சையில், சென்னை மாநிலத் தமிழாசிரியர் கழக மாநாடு நிகழவிருக்கின்றது. சில ஆக்கந் தரத்தக்க தீர்மானங்கள் நிறைவேற்றப்படவிருக்கின்றன. தமிழாசிரியர்கள் பலரும் வந்து சிறப்புற நடத்தித் தரவேண்டுவதோடு மாநாட்டு வெற்றிக்குரிய பொருளுதவியையும் புரிய வேண்டுகின்றோம்.

"சென்னையில் இருப்பவர்கள், பி. சண்முகம்(பிள்ளை), எண் 4, மேனன் தெரு, புரசைப்பாக்கம், சென்னை-7—என்ற முகவரிக்கும், பிற மாவட்டங்களிலிருப்பவர்கள், இரா. ஏகாம்பரநாதன் மாநாட்டுச் செயலாளர், எண் 197, வடக்குப் பெருந்தெரு, தஞ்சை என்ற முகவரிக்கும், பொருளை அனுப்பிவைக்க வேண்டுகிறோம்,"

என்று, மயிலை-சிவ. முத்து அவர்கள் கேட்டுக்கொண்டுள்ளார்.

### மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழா

"மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழா இவ்வாண்டு மே 30-ந் தேதி முதல் ஜூன் 5-ந் தேதி முடிய ஏழு நாட்கள் மதுரையில் சிறப்புற நடைபெற ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. விழா சம்பந்தமான கடிதப் போக்குவரத்துக்கள் 'செயலாளர், மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழாக் குழு, தமிழ்ச் சங்கத் தெரு, மதுரை,' என்ற முகவரிக்கு தெளிவாக எழுதப்பட்டால்தான் உடனுக்குடன் கவனிப்பதற்கு வசதியாயிருக்கும்,"

என்று, கூட்டுச் செயலாளர் கி. பழநியப்பா அவர்கள் தெரிவித்துள்ளார்.

### எவ்வளவு தெரியுமா?

சென்னை, மார்ச் 26—

1955 ஏப்ரல் திங்கள் 1-ந் தேதி முதல் 1956 பிப்ரவரித் திங்கள் 2-ந் தேதி வரையில், தென்பகுதி இரயில்வேயில் எல்லாப் போக்குவரத்து இனங்களிலும் ரூ. 48 கோடி வருமானம் கிடைத்திருக்கிறதாம்.

1,358 'டிக்கெட் கலெக்டர்'களும், 1,110 'டிக்கெட்' பரிசோதகர்களும், 'டிக்கெட்' இன்றிப் பிரயாணம் செய்வதைத் தடுக்கும் வேலையில் ஈடுபட்டுள்ளனராம்.

1955—56ல், 9,50,000 பேர் 'டிக்கெட்' இல்லாமல் பிரயாணம் செய்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டு, அவர்களிடமிருந்து ரூ. 15,68,000 வசூலிக்கப்பட்டதாம்.

### பொதுத் தேர்தல்: அமைச்சர் தகவல்

சென்னை, மார்ச் 27—

"அடுத்த ஆண்டு நடைபெறவிருக்கும் பொதுத் தேர்தலை ஒத்திவைக்கும் எண்ணமிருப்பதாகத் தெரியவில்லை; 1957 ஏப்ரல் மாதத்திற்குள் பொதுத் தேர்தல் முடிந்து புதிய சட்டசபை கூடும்,"

என்று, சென்னை மேல் (சட்ட) சபையில் நிதியமைச்சர் தெரிவித்துள்ளார்.

### இந்திய இராணுவம் 'செயலில்' இறங்குகிறது!

காவல் நிலையங்களைத் தாக்கும் நாகர்களை ஒடுக்கவாம்

ஷில்லாங், மார்ச் 28—

மலைகளில் ஒளிந்திருந்து, திடீரென சர்க்கார் காவல் நிலையங்களைத் தாக்கும் நாகா 'பயங்கரவாதி'களை எதிர்த்து, இந்திய இராணுவம் முதன் முறையாகச் 'செயலில்' இறங்கியிருக்கிறதாம்.

### பஞ்சாப் எல்லையில் இராணுவ நடமாட்டம்?

அமிர்தசரஸ், மார்ச் 27—

பிரோஜ்பூர் மாவட்டத்தில் உசேன்வாலா அருகில் பாகிஸ்தான் எல்லையில் புதிய இராணுவ நடமாட்டம் காணப்படுவதாக தகவல்கள் கிடைத்துள்ளதாம்.

### ரூ. 24 கோடி செலவில் குழாய்க் கிணறுகளாம்!

புதுடில்லி, மார்ச் 26—

இரண்டாவது திட்ட காலத்தில் பல மாநிலங்களில், சுமார் ரூ. 24 கோடி செலவில் 3,756 பாசனக் குழாய்க் கிணறுகளை அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்று மக்கள் சபையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின்கீழ் தேவைப்படியாக சுமார் 12 இலட்சம் ஏக்கரா பரப்பளவுக்குப் பாசன வசதி கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

### சட்ட விரோதமாம்!

சென்னை, மார்ச் 27—

சென்னை மின்சாரத் தொழிலாளர் சங்கத்தின் 'வேலை நிறுத்த நோட்டீஸ்' சட்டவிதிகளின்படி இல்லையாதலால், அது சட்ட விரோதமாகும் என்று, தொழிற் கமிஷனர் அறிவித்துவிட்டு, நிதானமிழக்காமல் சட்டபூர்வமான முறையில் நடந்துகொள்ளும்படி தொழிலாளர் யூனியனுக்கு ஆலோசனையும் கூறியுள்ளார்.

இந்தியாவில் தற்போது 19 காகித ஆலைகள் இயங்குகின்றன.

# விழுப்புரம் வரை மின்சார இரயில்

ஒப்பந்தம் ஏற்படாவிட்டால் திட்டம் பாதிக்கப்படுமா?

"மின்சார விநியோகக் கட்டண விகிதத்தில் சென்னை சர்க்காருடன் இரயில்வே அதிகாரிகள் ஓர் உடன்படிக்கைக்கு வந்தவுடன் விழுப்புரம் வரையில் மின்சார இரயில் போக்குவரத்தை விரிவுபடுத்துவதற்கான திட்டம் உடனடியாக அமுலுக்கு எடுத்துக்கொள்ளப்படும். மாநில அரசினர், 'யூனிட்' ஒன்றுக்கு சராசரி கட்டண விகிதம் ஓரணா கொடுக்க வேண்டுமெனகின்றனர்; இரயில்வே அதிகாரிகள் 'யூனிட்' ஒன்றுக்கு அரையணாவுக்கு மேல் சிறிது அதிகம் இருக்கலாமென்கின்றனர்"

என்று, தென் பகுதி இரயில்வே 'ஜெனரல் மானேஜர்' டி. ஏ. ஜோசப் திருப்பர்கள் கூட்டத்தில் கூறியுள்ளார்.

மேலும் அவர், "குறைந்த கட்டண விகிதத்தில் மின்சார விநியோகம் சம்பந்தமாக ஓர் ஒப்பந்தம் ஏற்படவில்லையெனில், விழுப்புரம் வரையில் மின்சார இரயில் போக்குவரத்தை விரிவாக்கும் திட்டத்தை எடுத்துக்கொள்ளும் பேச்சே கிடையாது. ஆனால் இது விஷயத்தில் நாங்கள் ஓர் ஒப்பந்தத்திற்கு வந்துவிடுவோம் என்பதில் எனக்கு அதிக நம்பிக்கை இருக்கிறது. ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டால் வேலை 1956—57-ல் துவக்கப்பட்டு இரு ஆண்டுகளில் முழுமை அடைந்துவிடும்" என்றும் தெரிவித்துள்ளார்.

எழும்பூருக்கும்—விழுப்புரத்திற்குமிடையே மின்சார இரயில் போக்குவரத்திற்காக, 'இரயில்வே போர்டு' ரூ 3·51 கோடி அனுமதி அளித்திருக்கிறதாம்.

### தொழிலாளருக்கு வீடு கட்டும் திட்டம்

வற்புறுத்தும் முறையை அரசியலார் ஆதரிக்கவில்லையாம்

சில தொழில்களில் ஈடுபட்டுள்ள முக்கிய தொழிலாளர்களில் ஒரு பகுதியினருக்காவது வீடு கட்டித் தர வேண்டுமென்று, தேர்ந்தெடுக்கப்பட்ட சில தொழில் அதிபர்களை வற்புறுத்த வேண்டுமென்ற யோசனையை இந்திய அரசியலார் ஏற்கவில்லை எனத் தெரியவருகிறது.

இவ்விதம் வற்புறுத்த வேண்டுமென்று, திட்டக் குழுக் கூட்டங்களில் பல உறுப்பினர்கள் வற்புறுத்தினர். முதலாளிகள் பதிலளிப்பதைப் பொறுத்தவரையில் மானியத் திட்டம் தோல்வி அடைந்துவிட்டதாக திட்ட இலாகா அமைச்சர் குல்சாரிலால் நந்தா தெரிவித்தாராம்.

# காங்கிரஸ் மேலிடத்தின் முரண்பட்ட போக்கு!

## 'நீதியைப் பெற முனையவேண்டும்'

"பலமொழிகள் பேசப்படும் ஒரு மாநிலத்தில் வாழும் மக்களிடையே, அந்த மாநில சர்க்கார் மீது நம்பிக்கையும், விசுவாசமும் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி இருக்க முடியாது என்ற உண்மையை மாநிலப் புனரமைப்புக் குழு தெளிவாகத் தெரிவித்துவிட்டிருக்கிறது. ஒரு பல மொழி மாநில அமைப்பு, அங்குள்ள மக்கள் தங்கள் பொறுமையையும், அறிவுத் திறனையும் வளர்த்துக்கொள்ள உதவுமானால், ஏன் பிரதமர் நேருவும், காங்கிரஸ் மேலிடமும் தனி ஆந்திர மாநிலப் பிரிவினையை ஆதரித்தார்கள்? சென்னை, பம்பாய், மத்தியப் பிரதேசம் போன்ற கூட்டு மாநிலங்களிலெல்லாம், அந்தந்த மாநில சர்க்கார்மீது மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையெல்லாம் உண்மையிலேயே மொழி அடிப்படையிலேயே எழுந்துள்ளவை என்பதையும் மாநிலக் குழு தெளிவாகத் தெரிவித்திருக்கிறது,"

என்று, அகில இந்திய இந்து மகா சபைத் தலைவர் என். சி. சாட்டர்ஜி அவர்கள், மாநிலப் புனரமைப்பு குறித்து இங்கு கூட்டப்பட்டிருந்த ஒரு கூட்டுக் குழுக் கூட்டத்தில் கூறியிருக்கிறார்.

"மொழி வாரி மாநில அமைப்பைக் கோருவதானது, கலாச்சாரத்திற்குப் புத்துயிர் தர வேண்டும் என்பதற்காகக் கையாளும் ஒழுக்கத்திற்குப் புறம்பான முயற்சியாகாது என்பதைத் தெளிவாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அரசியல், சமுதாய பொருளாதாரத் துறைகளில், துரதிருஷ்டம் பிடித்த நமது சொந்த நாட்டு மக்களுக்கு—மனிதர்களாலேயே உருவாக்கப்பட்ட பஞ்சத்தினாலும், பாகுபாட்டினாலும் அலைக்கழிக்கப்பட்டு வருந்தும் நமது சொந்த நாட்டு மக்களுக்கு — நீதியும், நியாயமும் வழங்கப்பட்டாக வேண்டும்; அந்த நீதியைப் பெற நாம் முனைய வேண்டும்,"

என்றும், அவர் மேலும் கூறினர்.

அகில இந்தியக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது, மொழிவாரி ஒருமைப்பாடு, மாநிலங்களைத் திருத்தி அமைப்பதற்குத் தகுந்த அடிப்படையாக இருப்பது குறித்துத் திருப்தி அடைவதாகவும், அப்படி உருவாகிற மாநிலங்கள், தாங்கள் சமுதாய, கலாச்சார வாழ்க்கைத்தரத்தை நல்ல முறையில் வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

### ரூ. 67 கோடிசெலவில்!

துறைமுகங்கள் அபிவிருத்திக்குத் திட்டம் தயாரிப்பு

புதுடில்லி, மார்ச் 28—

இரண்டாவது திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படுவதற்காக பெரிய துறைமுகங்களின் அபிவிருத்திக்காக மொத்தம் ரூ. 62,28,00,000 செலவு மதிப்புள்ள வேலைத் திட்டமொன்று தயாரிக்கப்பட்டிருக்கிறதாம்.

சிறிய துறைமுகங்களின் அபிவிருத்திக்காக சுமார் ரூ 5 கோடி செலவாகக்கூடிய திட்டங்கள் தயாரிக்கப்பட்டு வருகிறதாம்.

### கிராம மண்பாண்டத் தொழில் அபிவிருத்தி

புதுடில்லி, மார்ச் 26—

கிராம மண்பாண்டத் தொழிலின் அபிவிருத்திக்காக, மேற்கொண்டு கடனுதவியும், சகாயத் தொகைகளும் இந்திய சர்க்கார் வழங்கியுள்ளனர்.

ஓடுகளின் உற்பத்திக்காக, மைசூருக்குக் கடனாக ரூ. 6,000-உதவித் தொகையாக ரூ. 4,700 வழங்கப்பட்டிருக்கிறது.

கானுப்பூரிலும், டி. கல்லுப்பட்டியிலும் மாதிரி உற்பத்தி நிலையங்களின் நிர்வாகச் செலவுகளுக்காக அ. இ. காதி கிராமத் தொழில்கள் 'போர்டுக்கு' ரூ. 2,250-க்கு மேல் வழங்கப்பட்டிருக்கிறது.

தேனீ வளர்ப்புத் தொழிலின் அபிவிருத்திக்காக முன்னர் வழங்கப்பட்ட தொகையில், பயன்படுத்தப்படாமல் உள்ள ரூ 36,000 நடப்பு நிதி ஆண்டில் பயன்படுத்திக்கொள்ள போர்டுக்கு அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.

### ஊதிய உயர்வுதர எண்ணமில்லையாம்!

"மாவட்ட 'போர்டு'கள், 'முனிசிபாலிடி'களின் ஊழியர்கள் சம்பளத்தை, சர்க்கார் சிப்பந்திகள் சம்பளத்திற்கேற்ப உயர்த்த சர்க்காருக்கு எண்ணமிருக்கிறதா?" என்ற கேள்விக்கு, 'இல்லை' என்று, சென்னை ஸ்தல ஸ்தாபன அமைச்சர் எஸ். எஸ். இராமசாமி (படையாச்சி) சட்டசபையில் பதிலளித்துள்ளார்.

உத்திரப் பிரதேசத்தில், டேராடூன்-முசோரி பகுதியில் சுமார் 25,40,000-டன் உயர்தரமான சுண்ணாம்புக்கல் படிவங்கள் இருப்பதாக இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சி இலாகா கண்டு பிடித்திருக்கிறது.

### நெய்வேலி பழுப்பு நிலக்கரி பற்றி அமைச்சர்

தோண்டி எடுக்கலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறதாம்!

சென்னை, மார்ச் 27—

"நெய்வேலியில் பழுப்பு நிலக்கரியைத் தோண்டி எடுக்கலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது; அதன் 'தரம்' நல்லதாக இருக்கலாம்,"

என்று, தொழில் அமைச்சர் பக்தவத்சலம், கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில், சட்டசபையில் கூறியுள்ளார்.

நெய்வேலியில் தெர்மல் மின்சார நிலையம் ஏற்படுத்துவது பற்றி ஆலோசனை நடைபெறும் என்றும் அவர் கூறியுள்ளார்.

### சின்ன சேலத்தில் மூங்கில் சாமான் உற்பத்திசாலையாம்

சென்னை, மார்ச் 27—

வீட்டு உபயோகத்துக்கு அன்றாடம் பயன்படக்கூடிய மூங்கில் சாமான்களை உற்பத்தி செய்வதற்கென தென்னாற்காடு மாவட்டம் சின்ன சேலத்தில் உற்பத்தி நிலையம் (யூனிட்) ஒன்றை நிறுவுவதை சர்க்கார் அனுமதித்துள்ளனராம்.

# பகுத்தறிவுக்கு எதிராகப் பழமை விரும்பிகள் இயக்கம்!

'காகுத்தன் காதை'யைக் காப்பாற்ற இலவசக் 'கம்ப இராமாயண' வகுப்பு நடத்துவார்களாம்!

சிதம்பர புதுத்தெரு, வேதபாராயண மடத்தில், சாகித்ய கர்த்தா வி. வி. சுவர்ண வெங்கடேச தீட்சதர் தலைமையில், 'ஆத்திகர்' என்போரெல்லாம் கூடி, 'நாத்திக ஒழிப்பு இயக்கம்' துவங்குவதென முடிவு செய்தார்களாம்!

நாட்டில் நாத்திகம் நிலவி வருவதாகவும், இதை ஒழித்து ஆத்திகத்தைப் பரப்பவேண்டுமென்றும், அவ்வாறு பரப்புவதற்கு இது போல் கழகங்கள் ஏற்பட வேண்டுமென்றும் மூவர் கருத்தறிவித்தார்களாம்!

பின்னர், 'சிதம்பரம் நாத்திக ஒழிப்பு இயக்கம்' என்ற ஓர் கழகம் நிறுவப்பட்டு, எஸ். சக்ரவர்த்தி ஐயனார் தலைவராகவும், சிதம்பரம் சங்கர் துணைத் தலைவராகவும், கே. வி. ஜி. பதி செயலாளராகவும், கே. ஆர். பதி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்களாம்.

மேற்கண்ட இயக்கத்தின் சார்பில், இலவசமாகக் 'கம்பராமாயண' வகுப்பு நடத்துவதென முடிவு செய்யப்பட்டுள்ளதாம்.

### தமிழ் ஆட்சி மொழி பற்றி அமைச்சர்

ஒவ்வொரு அம்சத்தையும் பரிசீலனை செய்கின்றனராம்

"ஆட்சி மொழியாக தமிழைக் கொண்டு வருவது பற்றிய ஒவ்வொரு அம்சத்தையும் இப்போது சென்னை சர்க்கார் பரிசீலனை செய்து வருகிறது. இப் பிரச்சினையில் எதுவும் தவறிப் போக இடமிருக்காது"

என்று மேல் (சட்ட) சபையில், நிதிஅமைச்சர் சுப்பிரமணியம் தெரிவித்துள்ளார்.

# 'மத-மொழி வெறிக்குப் பணிந்துவிட்ட இந்திய அரசு தமிழர் கோரும் நியாயத்தை ஏற்க மறுப்பானேன்?'

## '36 கோடி மக்களின் எதிர்காலத்தை மூன்று கோடித் தமிழர்தான் நிர்ணயிக்க இருக்கின்றனர்'

## 'மாநிலப் புனரமைப்பு மசோதா நேருவையும், காமராசரையும் சட்டபூர்வமான சர்வாதிகாரிகளாக்கி விடும்'

சென்னைப் பொதுக்கூட்டத்தில் கூட்டணித் தலைவர்கள் முழக்கம்

சென்னை, மார்ச். 29—

மாநிலங்களைத் திருத்தி அமைப்பது குறித்த மசோதா சட்ட சபையில் விவாதத்திற்கு வரவிருந்ததை யொட்டி, சர்வ கட்சிக் கூட்டணியினர் தாங்கள் என்ன செய்ய இருக்கின்றனர் என்பதைப் பொது மக்களுக்குத் தெரிவிக்கும் வகையில் சென்ற 27-3-56-ந் தேதியன்று மாலை சென்னை நேப்பியர் பார்க்கில் சர்வ கட்சிக் கூட்டணிப் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. பொதுக் கூட்ட விவரங்களும் சொற்பொழிவின் ஒரு பகுதியும் நேற்றைய இதழில் தரப்பட்டிருக்கிறது. மறு பகுதி கீழே தரப்பட்டிருக்கிறது:—

## ப. ஜீவானந்தம்

"திரு—தமிழகப் பகுதி மக்கள் தாங்கள் தமிழகத்துடன்தான் சேருவோம் என்பதை, இரண்டு தடவைகள் வாக்கெடுப்பின் மூலம், அப்பகுதி மக்கள் உறுதியாகத் தெரிவித்துவிட்டார்கள். இந்த இரண்டு நிகழ்ச்சிகள் மட்டுமே போதும், தேவிகுளம் — பீர்மேடு பகுதிகள் தமிழர்களுக்குத்தான் என்பதற்கு!

"மாநில எல்லைகளைப் பொறுத்த வரையில், ஜனநாயக அடிப்படையில் எல்லைக் கோடுகள் தேவை. அதை நிர்ணயிக்க எல்லைக் குழு தேவை என்றுதான் நாமும் கோருகிறோம். மத்திய சர்க்கார் விடுத்த அறிக்கையிலும் 'தேவைப்பட்டால் எல்லைக் குழு நியமிக்கப்படும்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே இன்றும் வலியுறுத்துகிறோம்—'எல்லைக் குழு நிச்சயம் தேவை' என்பதை!

"எல்லைப் பிரச்சினையில் எழுந்த நெருக்கடியால், நாடே தேவையில்லை என்று சொல்லும் அளவுக்குத் தட்சிணப் பிரதேசப் பிரச்சினை கிளம்பிற்று; ஆனால், சரித்திரமே மறக்க இயலாத தமிழக சர்வ கட்சிக் கூட்டணியின் சாதனையால் அது இன்று எந்த நிலையை அடைந்திருக்கிறது என்பதை இப்போது நாம் பார்க்கிறோம்.

"எனவே, நாம் தமிழ்ப் பற்றுக் கொண்ட ஒவ்வொருவரையும் கேட்டுக்கொள்கிறோம்—'தமிழ் எல்லைகள் தமிழருக்கே என்று கூறுங்கள்'—என்று! 'தமிழ் நாட்டுக்கும், உங்கள் மனச்சாட்சிக்கும் துரோகம் செய்யாதீர்' என்று காங்கிரஸ் தமிழர்களையும் கேட்டுக்கொள்கிறோம்.

"உங்களால் வீரப் போராட்டங்கள் நடத்த முடியாமல் இருந்தாலும் இருக்கலாம்; ஆனால், நாட்டுக்கேனும் துரோகம் விளைவிக்காதீர்; எல்லோரும் ஒன்றுபட்டு ஒரே குரலில் போராடுவோம் என்று கேட்டுக்கொள்கிறோம்."

## நல்லசிவம்

"சட்டசபையில் மாநிலப் புது அமைப்பு குறித்து மசோதா வருகிறது. நம் கோரிக்கைகளுக்கு எதிராக மசோதா இருப்பது குறித்து நாம் என்ன செய்வதென்பது பற்றி ஆலோசிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

"இப்போது வந்துள்ள மசோதாவில், தகராறுகள் கிளம்புகின்ற பகுதிகளில், அத்தகராறுகளைத் தீர்க்க, 'பிராந்தியக் கவுன்சில்கள்' என்ற அமைப்புகளை நியமித்திருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. இதை நாம் அனைவரும் மறந்துவிடக்கூடாது. இதற்குத் தக்க நடவடிக்கை எடுக்காவிட்டால் இது புது உருவம் பெற்றுவிடும் என்பதை மனதிலிருத்திக்கொள்ள வேண்டும்.

"'சென்னையை தமிழ் நாடு என்று மாற்றிவிடுவதால் பயனொன்றுமில்லை; இப்படியே திருத்தம் கொண்டுபோனால் 'பிரச்சினை முடிவுறாது; எற்கனவே புதிய திருத்தங்களைக் கொண்டதுதான் இந்த மசோதா; எனவே, யாரும் இதை எதிர்க்கவேண்டாம்'—என்று காமராசர் கூறுகிறார். மசோதாவில் உள்ள புதிய திருத்தம்தான் என்ன? தேவிகுளம்—பீர்மேடு தமிழர்களுக்குக் கிடைத்ததா? இல்லை சென்னைக்குத் தமிழ் நாடு என்று பெயர் மாறிற்றா? அதுவும் இல்லை. இவற்றையெல்லாம் பார்க்கும்போது, இந்த மாநிலப் புது அமைப்பு மசோதா. இன்னும் 5, 6 ஆண்டுகளில், நேரு, காமராசர் போன்றவர்களையெல்லாம் சட்ட ரீதியான சர்வாதிகாரிகளாகத்தான் ஆக்கிவிடப்போகிறது."

## கே. விநாயகம்:

மாநிலப் புது அமைப்பு குறித்த மசோதாவில் தெற்கிற்குத்தான் அநியாயம் விளைவிக்கப்பட்டிருக்கிறது. வடக்கிலுள்ள ஒவ்வொரு மாநிலத்தவரும்—யார் யார் எவை எவை தேவையென்று கேட்டார்களோ — அவைகளில் வெற்றி பெற்றுவிட்டார்கள் — அவர்களது எண்ணம் நிறைவேறிவிட்டது. பஞ்சாபியர்கள், இமாசலத்துடன் இருக்க முடியாது என்று சீக்கியத் தனி மாநிலம் கோரினார்கள்; வெற்றி பெற்றார்கள்; மராட்டியர்கள் பம்பாய் நகர் தங்களுக்கு வேண்டும் என்றார்கள்; முழு வெற்றி பெறவில்லையானாலும் எதிரிக்குச் சாதகமில்லாத அளவிற்கேனும் வெற்றி பெற்றுவிட்டார்கள். ஆந்திரர்கள், 'விசால ஆந்திரம்' தேவையென்றார்கள். பசில் அலிக் குழு, 'இன்னும் 5 ஆண்டுகளுக்கேனும் ஆந்திரமும், தெலிங்கானாவும் தனித்தனியாக இருந்து, பிறகு ஒன்று சேரலாம் என்றனர். ஆனால் இப்போது, இரண்டையும் ஒன்று சேர்த்து 'ஆந்திரப் பிரதேசம்' என்று பெயரும் சூட்ட இருக்கிறார்கள்.

"அநியாயம் என்று தெரிந்திருந்தும், தேவிகுளம்—பீர்மேடு தங்களுக்கே என்று மலையாளிகள் குரல் கொடுத்தார்கள்; வெற்றி பெற்றுவிட்டார்கள். இந்த மாநிலங்களிலெல்லாம் மற்றக் கட்சிகளுடன் காங்கிரசும் சேர்ந்து தங்கள் உரிமைக்காகப் போராடியிருக்கின்றன ஆனால் இங்கோ, கிடைத்ததையும் கோட்டைவிட்டுக்கொண்டிருக்கிறார்கள் நமது காங்கிரசார்.

"'தமிழ் நாடு என்று பெயர் வைப்பதில் என்ன தவறு? காமராசர் கேட்கிறார்—'தமிழ் நாடு என்று பெயர் வைத்துவிட்டால் தண்ணீர் கிடைத்துவிடுமா? பொருளாதார நிலை உயர்ந்துவிடுமா?'—என்று! இப்படிப்பட்டவரை வைத்துக்கொண்டு நாம் என்ன செய்வது—'சென்னை' என்பது ஒரு அடிமைச் சொல் என்பதைச் சுட்டிக்காட்டுவதைத் தவிர!

"தனிப்பட்ட முறையில் செய்வதைவிட, எல்லோரும் ஒன்று சேர்ந்து போராடுவது சிறந்தது என்று நாம் இவற்றைச் செய்தும் இந்நிலை நீடிப்பானேன்? இதற்குக் காரணம் எல்லாம், ஒருமுறை தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டால் தங்களை 5 ஆண்டுகளுக்கு யாராலும் எதுவும் செய்ய முடியாது; எனவே, தங்களின் விருப்பப்படி நடந்துகொள்ளலாம் என்று நினைத்துக்கொண்டு, 'மக்கள் யார்?' என்று கேட்கும் அளவுக்குத் துணிவும் பெற்றுவிட்டார்கள்.

"உண்மையிலேயே காங்கிரஸ்காரர்கள் மசோதா திருத்தத்திற்கு ஆதரவாக வாக்குத்தர நினைத்தாலும் முடிவதில்லை; ஏனென்றால், அடுத்தத் தேர்தலில் தாங்கள் நிற்க 'செலக்ஷன்' கிடைக்காதே என்று தயங்குகிறார்கள். தங்களைத் தேர்ந்தெடுக்கிறவர்கள் 'மக்கள்' என்பதை மறந்து தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டதால்தான் இந்நிலை மேலும் நீடிக்கிறது."

## காஞ்சி-கல்யாணசுந்தரம்

"மொழி அடிப்படையில் மாநிலங்கள் அமைக்கப்படவேண்டும் என்ற கருத்தைக் காங்கிரஸ் கட்சியும் ஒத்துக்கொண்டிருக்கிறது இதே அமைச்சர்களான சுப்பிரமணியமும், பக்தவத்சலமும் சென்னை சட்டசபையில் மாநில புது அமைப்புக் குழு சிபாரிசு குறித்த விவாதத்தின்போது பேசியவற்றை அப்படியே நாளை சட்டசபையிலும் எடுத்துக்காட்டினால், அப்போது தெரியும் அமைச்சர்கள்படும் வேதனை!

"டில்லிக்குப் போகுமுன்னர் ஆந்திரத் துணை முதலமைச்சர் சஞ்சீவி ரெட்டி சொன்னார்—'ஏதாவது நாம் செய்தால்தான் டில்லி சர்க்கார் செவி கொடுக்கும்'—என்று! அதற்கு முன்வரையிலும், மொழி அடிப்படையை ஒத்துக்கொள்ள முடியாது என்று சொன்ன நேரு என்ன ஆனார்?

"இமாசலப் பிரதேசத்துடன் பஞ்சாபும் சேர்க்கப்பட்டிருந்ததினால், தங்களுக்கேற்பட்ட இந்தி மொழி வெறியர்களின் மொழி வெறியை மட்டுமின்றி மதவெறியையும் தாங்கிக்கொள்ளமாட்டாமல் பஞ்சாபியர், 'பஞ்சாபும்—பெப்சும் மட்டும் கொண்ட சீக்கிய மொழி மாநிலம் தேவை' என்று கோரினர். அதற்கிணங்க, இமாசலப் பிரதேசம், பஞ்சாப், பெப்சு ஆகிய மூன்று பகுதிகளையும், இரண்டு தனித்தனி மொழி மாநிலங்களாகப் பிரித்து, தனி மொழி மாகாணத்தையே கட்டுப்படுத்தும் ஆற்றல் கொண்ட வட்டாரக் குழுக்கள் அமைத்துக்கொண்டதின் மூலம் மொழி வெறியை மட்டுமின்றி, மத வெறியையும்கூட இந்திய சர்க்கார் ஒத்துக்கொண்டார்கள். அப்படி மொழி, மத வெறிகளையெல்லாம் ஒத்துக்கொண்ட இந்திய சர்க்கார்தான், தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில், மொழி அடிப்படையில் தமிழக எல்லைகள் அமைக்கப்பட வேண்டும் என்ற தமிழரது கோரிக்கையை ஒத்துக்கொள்ள மறுக்கிறது.

"மொழி உணர்வை அவர்கள் ஒத்துக்கொண்டார்கள் என்று சொல்வதைவிட, மொழி வெறி, மத வெறி இரண்டுக்கும் மத்திய சர்க்கார் சட்டப்பூர்வமான ஒப்புதல் தந்திருக்கிறார்கள் என்று கூறவேண்டும். ஆனால் நாம் இங்கு அப்படி ஒன்றும் சொல்லவில்லை. நமக்கு இருப்பது மொழி வெறி அல்ல; மொழிப் பற்று. அந்த மொழிப் பற்றைக்கூட ஒத்துக்கொள்ள மறுத்துவிட்டார் — ஜனநாயகம் பற்றியும், அதனை முழுக்க முழுக்க ஆதரித்தும் பேசும் நேரு பண்டிதர்.

"இப்போதுகூட அவசிய மேற்பட்டால் எல்லைக் குழு நியமிக்கப்படும் என்று கூறியிருக்கிறார், இத்தருணத்திலாவது நமது முதலமைச்சர் எல்லைக் குழு தேவைதான் என்று கூற முன்வரவேண்டும்."

## ம. பொ. சிவஞானம்:

"இன்றைய நிலையில், மிகப் பெரிய இக்கட்டான கட்டத்தில் தமிழகம் இருந்து வருகிறது; நாளை வெளிவர இருக்கும் மசோதாவினால் மூன்று கோடி தமிழ் மக்களின் தலையெழுத்தும் நிர்ணயிக்கப்பட இருக்கிறது. ஆனால், எதிர்காலத்தில், 36 கோடி மக்களின் தலையெழுத்தும் 3 கோடி தமிழ் மக்களால் நிர்ணயிக்கப்பட இருக்கிறது என்பதையும் கூறிக்கொள்கிறோம்.

"தமிழரின் தலையெழுத்து நிர்ணயிக்கப்பட இருக்கும் இந்த நிலை குறித்து வெட்கப்படும் கூட்டம் உள்ளே இருக்கிறது; ஆனால், உள்ளம் குமுற, நாடி நரம்பு துடிதுடிக்க மக்கள் கூட்டம் வெளியே இருக்கிறது.

"மாநிலக் குழுவின் சிபாரிசு வந்ததால், 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்ற மனோன்மணியப் பாடலுக்கேற்ப, இந்தியா இருட்டில் கிடந்தபோது ஒளியூட்டிய சரித்திரப் புகழ்பெற்ற குமரி முனை தமிழகத்திற்குக் கிடைத்தது என்பதை நினைக்கும்போது ஓரளவிற்கு நாம் திருப்தி அடைகிறோம்: ஆறுதல் மகிழ்கிறோம்; திரு-தமிழகப் பகுதிகள் தாய்த் தமிழகத்துடன் சேரவேண்டுமென்பதை உறுதியாகத் தெரிவித்த திரு-தமிழக மக்களுக்குத் திக்கு நோக்கித் தெண்டனிடுகிறோம். ஆனால், இந்த மசோதாவினால் இரண்டு தீமைகள் உண்டு; தமிழக வடக்கெல்லை—மேற்கெல்லைகளில் சரியானவரையறை இல்லை; சென்னை ராஜ்யத்திற்கு 'தமிழ் நாடு' என்ற பெயர் கிடைக்கவில்லை.

"'தமிழ் நாடு' என்று நாட்டுக்குப் பெயர் இருக்கும்போது, 'சென்னை நகர'மும் இருக்கத்தான் செய்யும். இங்கிலாந்தில் 'லண்டன்' என்று சொல்லும்போது, ரஷ்யாவில் 'மாஸ்கோ' என்று கூறும்போது, ஜெர்மனியில் 'பெர்லின்' என்று சொல்லும்போது, அமெரிக்காவில் 'நியூயார்க்' என்று அழைக்கும்போது அவைகளுக்கெல்லாம் சிறந்த பெயர் உண்டு; ஆனால் அதற்காக அவைகளையெல்லாம மாற்றி, 'லண்டன் நாடு,' 'மாஸ்கோ நாடு,' 'பெர்லின் நாடு,' 'நியூயார்க் நாடு,' என்று கூறுவோமா? 'சென்னை' என்ற பெயர் சர்வதேசப் புகழ் பெற்றது என்று காமராசர் கூறுகிறாரே—யார் அந்தப் புகழைப் பார்த்தது? இந்நாட்டு கூலிக்காரனும் -வண்டிக்காரனுமா பார்த்தான்?

"உலகில் எங்கு பார்த்தாலும் அந்தந்த நாடு அந்தந்த மொழியின் அடிப்படையிலேயே அழைக்கப்படும்போது, 'சென்னை'யை மட்டும், மொழியின் அடிப்படையில் 'தமிழ் நாடு' என்று மாற்றத் தேவையில்லை என்று சொல்வது எதற்காகவென்பது புரியவில்லை? சென்னையை எடுத்துக்கொண்டால் கூட அதற்கும் இரண்டு பெயர்; ஒன்று, 'மதராஸ்'; மற்றொன்று, 'சென்னை'; இரண்டும் அடிமைப் பெயர்கள். ஏன் இன்னும் இந்த அவமானப் பெயர்கள் நீடிக்க வேண்டும் என்றுதான் நாம் கேட்கிறோம்

"மக்களுடைய முடிவைக் கேட்டுச் சொல்கிறேன் என்று அமைச்சர் காமராசர் கூறினாரே? எந்த மக்கள் 'தமிழ் நாடு' என்ற பெயரை எதிர்த்தார்கள் என்பதைக் காட்ட முடியுமா? 'எனவேதான், நாம் நம்முடைய கடைசி மூச்சு இருக்கும்வரையில், 'தமிழ் மாநிலம்' என்ற பெயரைப் பெற்றே தீருவோம்' என்று உறுதி கொள்வோம்.

"செங்கோட்டையையும், தேவிகுளம், பீர்மேடு பகுதிகளையும் கோட்டைவிட எந்த மக்கள் உங்களிடம் சொன்னது? சட்டசபையிலுள்ள காங்கிரஸ் உறுப்பினர்களா, மற்ற உறுப்பினர்களா? காட்டுங்கள் அவர்கள் திருமுகத்தை! இப்பொழுது வெளிக்காட்ட மறுக்கிறார்கள்.

'தன்னெஞ்சு அறிவது
பொய்யற்க—
பொய்த்த பின், தன்னெஞ்சே
தன்னைச் சுடும்'

என்ற, திருக்குறள் படிக்காததின் விளைவுதான் இவைகளெல்லாம்!"

(தோழர்கள் எஸ். சுயம்பிரகாசம், ஏ சுப்பிரமணியம் பேச்சு நாளை வெளிவரும்.)

---

## கழகக் கூட்டம்

★

பட்டிவீரன்பட்டி:
31—3—56 மாலை 6 மணிக்கு

தலைவர்:
டி. வி. எஸ். நடராசன்

பேசுவோர்:
கே. ஏ. மதியழகன்
மதுரை-சந்தானம்
எம். பாஸ்கரன்
டி. இராமச்சந்திரன்
டி. என். எஸ். மீனாட்சிசுந்தரம்
க. நடராசன்
க. காசிராசன்
சி. மதிப்பிரகாசம்

---

## கே. ஏ. மதியழகன்

சுற்றுப்பயணம்
மார்ச் 31: பட்டிவீரன்பட்டி
ஏப்ரல் 1: சோழவந்தான்

---

'காஷ்மீர் இளவரசி'யை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

உடனே வெளி விவகாரச் செயலாளர் செலவின் லாயிட், 'அவ்வாறு உறுப்பினர் குற்றம் சுமத்துவதில் உண்மை இல்லை' என்று பதிலிறுத்திருக்கிறார்.

---

மாநிலப் புனரமைப்பு...

(முதல் பக்கத்தின் தொடர்ச்சி)

இடையே உள்ள எல்லைத் தகராறுகளை விசாரித்து, கிராமந் தோறும் மக்கள் மொழிப் பெரும்பான்மையை அடிப்படையாகக் கொண்ட ஒரு எல்லைக் குழு உடனடியாக நியமிக்கப்படவேண்டும் என்று தோழர் ப. ஜீவானந்தம் உட்பட கம்யூனிஸ்டுத் தோழர்கள் திருத்தம் கொண்டுவர இருக்கின்றனர்.

தகராறு நிலவிவருகின்ற தமிழ்ப் பகுதிகளைப் பொறுத்த வரையில் மொழிவாரி அடிப்படையில் முடிவுசெய்ய மாநில திருத்த அமைப்பு மசோதா நிறைவேற்றப்பட்ட ஒரு மாத காலத்திற்குள் எல்லைக் குழு நியமிக்கப்பட்டாக வேண்டும் என்றும், அதனுடைய தீர்ப்பை நிறைவேற்றிவைக்க குடியரசுத் தலைவர் தேதி நிர்ணயிக்க வேண்டும் என்றும், அந்தத் தேதி நிர்ணயம் வருகிற பொதுத் தேர்தலுக்கு முன்னதாகவே இருக்கவேண்டும் என்றும் தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் திருத்தப் பிரேரணை கொண்டுவர இருக்கிறார்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. செழியன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. செழியன் எம்.ஏ.

